அங்கத்தினர் சொன்ன அளவுக்குப் பாசன வசதி கொடுக்க முடியுமா என்று பரிசீலனை செய்திருக்கலாம். கடைசியாக ஒரு முடிவுக்கு வரும் போது 13,674 ஏக்கராக்களுக்குத்தான் பயன்படும் என்று தெரிகிறது.

Sri M. KALYANASUNDARAM : இந்தத் திட்டப் பரிசீலனை பூர்த்தி செய்யப்பட்டு, மூன்ருவது ஐந்தாண்டுத் திட்டத்தின் நகலில் சேர்க்கப் பட்டுள்ளது கனம் அமைச்சர் அவர்களுக்குத் தெரியுமா ? போதுமான நிதி ஒதுக்காத காரணத்தால் அது கைவிடப்படும் என்பதற்கு அறிகுறியாக இப்படி ஜவாப் சொல்லப்படுகிறதா ?

The Hon. Sri P. KAKKAN : ஏற்கெனவே பரிசீலனை செய்திருக்கிருர்கள் என்பது நன்ருகத் தெரியும். நீர்ப்பாசனத்திற்கு அதிகமாக நாம் திட்டம் போட்டோம். பிறகு திட்டக் கமிஷனில் குறைத்து விட்டதினுல், நாம் எந்த எந்தத் திட்டங்களை எடுத்துக் கொள்வது என்பது பற்றி இன்னும் இறுதி முடிவு செய்யப்படவில்லை. ஆகையால், கைவிடப்படுமா, கைவிடப் படாதா என்ற பிரச்னை இல்லை என்பதைத் தெரிவித்துக் கொள்கின்றேன்.

### *Palar Basin Rules*

* 1309 *Q.*—Sri S. M. ANNAMALAI : கனம் பொது மராமத்து அமைச்சர் தயவுசெய்து கீழ்க்கண்ட கேள்விக்குப் பதிலளிப்பாரா—

பாலாறு பேசின் விதிகள் மற்ற உப நதிகளுக்கும் உள்ளதை ரத்து செய்ய வேண்டுமென்று வடாற்காடு மாவட்ட அபிவிருத்திக் கவுன்சில் அனுப்பிய தீர்மானத்தின்மீது சர்க்கார் எடுத்துக்கொண்ட நடவடிக்கை என்ன ?

The Hon. Sri P. KAKKAN : No action has been considered
9–30 a.m. necessary on the resolution for relaxation of the Palar basin rules as such relaxation is being made wherever extension of irrigation by lift is possible without affecting the existing interests.

Sri V. K. KOTHANDARAMAN : கிணறுகளுக்கு பம்பு செட்டு முதலியன வைப்பதற்கு அனுமதி அளிக்கும்போது ஒரு கிணற்றுக்கும், இன்னொரு கிணற்றுக்கும் இடையில் 2,000 அடி இருக்கவேண்டும் என்பதாக சமீபத்தில் விதி ஏற்படுத்தியுள்ளதாகத் தெரிகிறது. அதையும் கூட ரத்து செய்ய வேண்டுமென்ற அளவுக்கு வடாற்காடு மாவட்ட அபிவிருத்திக் கவுன்சில் தீர்மானம் போட்டு, எல்லாக் கட்சிகளும் சேர்ந்து ஏகமனதாக அதை நிறைவேற்றி அனுப்பியிருக்கிறது. அதைப்பற்றி கனம் அமைச்சர் அவர்கள் என்ன செய்வதாக உத்தேசம் ?

DEPUTY SPEAKER : The hon. Member may put a separate question.

### *Coconut (Exemption from salestax)*

* 1310 *Q.*—Sri A. A. RASHEED : Will the Hon. the Minister for Industries be pleased to state whether the Government have received any representation recently from the Provincial Coconut Producers and Merchants Association to exempt coconut from sales tax?

The Hon. Sri R. VENKATARAMAN : Yes, Sir.

Sri V. K. KRISHNAMURTHY : தேங்காயானது எண்ணெய் வித்துக்களுடன் சேர்க்கப்பட்டிருப்பதால் கொப்பரைக்கு வரி விதித்துவிட்டு, இளநீருக்கும், தேங்காய்க்கும் வரி விதிக்காமல் இருக்க அரசாங்கம் முன் வருமா ?

21st August 1961]

THE HON. SRI R. VENKATARAMAN : இந்தியா சர்க்கார் "எண்ணெ வித்துக்கள்" என்ன என்ன என்று குறிப்பிட்டு ஒரு சர்க்குலர் அனுப்பிஞர்கள் அதைப் படிக்கிறேன். "Coconut has to be understood to mean coconut—fresh or dried, shelled or unshelled including copra, but excluding tender coconuts." ஆகையால் இளநீர்களைத் தவிர மற்றது எல்லாம் எண்ணெ வித்துக்கள் என்று விளக்கம் கொடுத்திருக்கிருர்கள்.

DEPUTY SPEAKER : Questions are over.

[*Note*. An asterisk (*) at the commencement of a speech indicates revision by the Member.]

## II. POINT OF ORDER *re* PUTTING SUPPLEMENTARY QUESTIONS.

SRI S. M. ANNAMALAI : On a point of order, Sir. சட்ட மன்ற உறுப்பினர்களுக்கு உபகேள்வி கேட்க உரிமை இருக்கிறது. அதனுலேயே நாங்கள் உபகேள்வி கேட்க அனுமதிக்கப்படுகிறேம். என்னுடைய மெயின் கேள்வியே சரியான முறையில் ஆங்கிலத்தில் மொழி பெயர்க்கப்படாததால்—அது வேறுவிதமாக மாற்றி அமைக்கவும் பட்டிருப்பதால் அதைப் பற்றி கேட்க எனக்கு உரிமை இல்லை என்றுல் வேறு எந்த வகையில் அதைப்பற்றி நான் எழுப்ப முடியும் என்று கேட்கிறேன்.

DEPUTY SPEAKER : While the hon. Members have got a right to put supplementary questions, the Chair has got the right to allow or disallow a supplementary question.

## III. PERSONAL EXPLANATION UNDER QUESTION NO. 1290.

THE HON. SRI V. RAMAIAH : On a point or personal Explanation Sir ; திரு. என். ஆர். தியாகராஜன் போட்ட மூலக் கேள்விக்கு (கேள்வி—1290) கனம் மூக்கைய தேவா அவர்கள் உபகேள்வி போடும் போது மதுரை ஜில்லாவில் நான் சுற்றுப் பிரயாணம் செய்தபோது அந்தப் பிராந்திய விவசாயிகளுக்கு கம்பளிப் பூச்சியினுல் உண்டாகிற துன்பங்களை நீக்கப் பல வாக்குறுதிகளைக் கொடுத்துவிட்டு அதை அப்படியே விட்டு விட்டதுபோலப் பேசினுர்கள். அதைப்பற்றி அவர்கள் சரியான முறையில் தெரிந்து கொள்ளாது, தெரிந்துக்கொள்ள முயற்சி செய்யாது ஏதோ பிரசார ரீதியில் பேசுவது சரியல்ல. பத்திரிகையில் வந்த செய்தியைப்படித்துவிட்டு அதுபோல் அமைச்சர் அவர்கள் செய்வது சரியா என்று கேட்டார்கள்.

கனம் அங்கத்தினர் மூக்கைய தேவர் அவர்களுக்கு அப்படி பத்திரிகையில் வந்த செய்தி தவறு, என்ன என்ன நடவடிக்கைகளை எடுக்கப்பட்டிருக்கின்றன என்று என்னுல் திட்டவட்டமாகச் சொல்ல முடியும். நடந்தது என்ன என்று பார்க்கலாம். மதுரைக்கு நான் போய் இருக்கக் கூடிய நேரத்தில் ஒரு பத்திரிகைச் செய்தியை "உசிலம்பட்டியில் கம்பளிப் பூச்சித் தொந்தரவினுல் ரயில் ஓடுவது நின்று விட்டது" என்பதைப் பார்த்தேன். அதைப் பார்த்தவுடன் ஏற்பட்ட வேதனை காரணமாக மற்ற நிகழ்ச்சிகளை எல்லாம் விட்டுவிட்டு உடனே அந்த இடத்திற்குச் சென்று கிட்டத்தட்ட இருபது இருபத்திரண்டு கிராமங்களுக்குச் சென்று பார்த்தேன். ஏதோ ஒரு கிராமத்தில் இருந்து விவசாயிகளுடன் பேசி அவர்களுக்கு ஏதோ வாக்குறுதி கொடுத்துக்கொண்டிருக்கவில்லை. நின்று பேசக் கூட அப்போது நேரமில்லை. ஆனுல் நான் செய்தது என்ன ? கம்பளிப் பூச்சியினுல் பாதிக்கப்பட்ட கிராமங்களையும், அங்குள்ள கஷ்ட நிலையையும் கண்டவுடன் உடனே அரசாங்கத்திற்கு தெரிவித்துத் தக்க நடவடிக்கை எடுக்கவேண்டும் என்று நினைத்தேன். அது சம்பந்தப்பட்ட அதிகாரிகளையும் சந்தித்துப் பேசினேன். அதுபற்றி ஒரு அறிக்கை சமர்ப்பிக்கும்படியாகவும் சொல்லிவிட்டு வந்தேன். அவர்கள் அன்று முதல் அங்குள்ள